(ஆ) இதைக் குறித்து மாவட்டத்திலுள்ள எல்லா சட்ட மன்ற உறுப்பினர்களையும் கலந்து ஆலோசிக்கப்பட்டதா?

(இ) இல்லையாயின் அதற்கான காரணங்கள் யாவை?

THE HON. SRI P. KAKKAN : (அ) Fifteen villages, namely :—

Ponnanthangal.
Murugapadi.
Tirumalai.
Turinajapuram.
Kakkanampalayam.
Kasinaikenpatti.
Kandili.
Peddur.
Somasamudram.
Koorambadi
Mamandoor.
Kumbinipettai.
Palli
Ananganallur.
Anaicut.

(அ) & (இ) The Collector has issued instructions to the Block Development Officers and Tahsildars to consult the local M.L.As. and M.Ps. and obtain their views before the names of villages are suggested so that their views may also be considered. The list of villages selected for the year was however got approved by the District Harijan Welfare Committee at its meeting on 28th April 1960.

SRI S. M. ANNAMALAI : இங்கு சட்டமன்றம் நடந்து கொண்டிருந்தபோதிலும் அங்கு கலெக்டர் அவர்கள் கூட்டத்தைக் கூட்டி அந்த முடிவு எடுத்துவிட்டார்கள். சட்டமன்ற அங்கத்தினர்களைக் கலந்து முடிவு எடுக்கப்பட்டது என்று சொல்வது அவ்வளவு பொருத்தமல்ல. வேண்டுமானால் மற்ற சட்டமன்ற அங்கத்தினர்களைக் கேட்டுப்பாருங்கள். ஆகவே இப்படி ஒரு முக்கியமான பிரச்னை வரும்போது சட்டமன்ற அங்கத்தினர்களைக் கலந்துதான் செய்யவேண்டுமென்று சர்க்கார் கண்டிப்பாக உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு சட்டமன்றம் கூடுவதற்கு முன்பாகவே நோட்டீஸ் போய் இருக்குமென்று கருதுகிறேன். எப்படியிருந்தாலும் ஏழைகளுக்கு நன்மை ஏற்படுகிறது. அன்றையதினம் ஆஜராகி நல்ல காரியத்தில் பங்கு கொள்ளவேண்டும், கொண்டிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்.

*Medical Graduates*

*347 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டில் தேர்ச்சி பெற்ற மருத்துவப் பட்டதாரிகள் எத்தனை பேர்கள்?

(ஆ) இவர்களுள் எத்தனை பேர்கள் அரசாங்க ஸ்காலர்ஷிப் மூலமாகப் படித்தவர்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ)&(ஆ) A statement* is placed on the table of the House.

---

* Printed as Appendix III on page 192 infra.

20th August 1960]

SRI P. G. MANICKAM : ஸார், மேஜை மீது வைக்கப் பட்டிருக்கும் குறிப்பில் 1960-ம் ஆண்டில் அரசாங்க ஸ்காலர் ஷிப் பெற்றவர்கள் 27 ஆண்களும், 9 பெண்களும் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அவர்களுக்கு இந்த அரசாங்கத்தினுடைய பணத்தைத்தான் வைத்தியப்படிப்புக்காகக் கொடுத்திருக்கிறோம். ஆகவே இவர்கள் தேச சேவை செய்ய முன் வரக்கூடாதா? இவர்கள் எல்லாம் தேச சேவை செய்ய முன் வரவேண்டும் என்று அரசாங்கம் அழைப்பு அனுப்புமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதில் ஒரு நிர்ப்பந்த மான ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது. இதை ஸ்காலர்ஷிப் கொடுக்கும்போது செய்ய வேண்டும். இந்த நிபந்தனையைக் கொண்டு வரலாமா என்பது பற்றி ஆலோசனை நடந்து கொண்டி ருக்கிறது.

*Drainage facilities for certain lands*

* 348 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மன்னார்குடி தாலுக்கா தென்கரை கிராம வாசிகளிட மிருந்து திருமேனியாறு பாயும் நிலங்களுக்கு வடிகால் வசதி கோரி அரசாங்கத்திற்கு விண்ணப்பம் வந்ததா ?

(ஆ) அப்படியாயின் அதன்பேரில் அரசாங்கம் எடுத்த நட வடிக்கை என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (அ) A representation was received by the Executive Engineer, Grand Anicut Canals Division, in April 1958, from the villagers of Thenparai.

(ஆ) It is reported that the channel requires widening and strengthening of banks involving land acquisition. The improvement work will be taken up under Special Minor Irrigation Programme.

SRI A. VEDARATHNAM : ஸார், தஞ்சை ஜில்லாவில் இந்த கடலோரப் பகுதிகளில் இருக்கின்ற எல்லா கிராமங் களிலும் மழை காலம் வரும்போது கிராமங்களில் எல்லாம் தண்ணீர் வந்து நிரம்பி விடுகிறது. அதே சமயத்தில் காவேரியில் தண்ணீர் விடும்போதும் அதிகமாக தண்ணீர் வந்து வீடுகள் எல்லாம் தண்ணீரில் மூழ்கிவிடுகின்றன. இதைப்பற்றி நூற்றுக் கணக்கான மகஜர்கள் அரசாங்கத்திற்கு வந்திருக்கின்றன. ஆகவே இந்தக் கஷ்டத்தை நிவர்த்தி செய்ய வடிகால் வசதியைப் பெருக்க அரசாங்கம் உடனடியாக ஏதாவது முயற்சி செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : உண்மையிலே கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுகின்ற மாதிரி பல கிராமங்களும், நிலங்களும் பாதிக்கப்படுகின்றன. இதைப்பற்றி நான் அங்கு சென்றிருந்த